10th April 1958]

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படித் தயாராய் இருக்கிறவர் நிதி அமைச்சர். அவரிடத்தில் இந்தக் கேள்வியைக் கேட்டால் பதில் தெரியும்.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, இப்படிப்பட்ட சீர்திருத்தத்தைச் செய்வதற்கு—சாதிப் பெயர் போட்ட பலகையை வைக்க வேண்டிய அவசியம் இல்லை என்பதாக ஸ்ரீ சங்கராச்சாரியார் அவர்களே அறிவுரை வழங்கிவருகிற நேரத்தில்—நமது அமைச்சர் அவையும் அப்படிப்பட்ட அறிவுரையை வழங்க முன்வருமா ?

MR. SPEAKER : ஸ்ரீ சங்கராச்சாரியாரை ஏன் இந்த விவாதத்தில் இழுக்கிறீர்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : வேண்டும்போது சங்கராச்சாரியாரை இழுத்துக்கொள்வது, வேண்டாதபோது தள்ளிவிடுவதா ?

SRI S. NAGARAJA MONIGAR : இந்தச் சீர்திருத்தம் ஹோட்டல்களில் சாதிப் பெயர் போட்டுக் கொள்ளவேண்டாம் என்பதைப்பற்றி மட்டும்தானா ? அல்லது உதாரணமாக நாடார்கள், முஸ்லிம்கள் . . .

MR. SPEAKER : You can only ask questions. The question is out of order. (Laughter.)

SRI S. NAGARAJA MONIGAR : நாடார்கள், முஸ்லிம்கள், என்பதாக இதர ஸ்தாபனங்களும் சாதியின் பெயரால் வைக்கப்படுவதை பொதுவாக ஆட்சேபிப்பதற்காகவே செய்யப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தக் கேள்வி ஹோட்டல்களைப்பற்றியதுதான்.

*Groundnut marketing societies*

* 663 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the number of groundnut marketing societies so far constituted; and

(*b*) whether there is any proposal to constitute groundnut marketing societies in important centres in the North Arcot district?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No co-operative marketing society exclusively for sale of groundnut has been formed.

(*b*) No, Sir. Co-operative marketing societies are generally formed on a regional basis and not on a commodity basis.

SRI N. K. PALANISAMI : வடாற்காடு ஜில்லாவில் ஒரு கிரவுண்டுநட் மார்க்கெட்டிங் சொஸைட்டி ஏற்படுத்துவதற்கு உத்தரவு போட்டுவிட்டு அதை வாபஸ் பெற்றுக்கொண்டதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : I have already said that it is not the policy of the Government to form any marketing society on a commodity basis. It could be formed only on a regional basis.

SRI A. A. RASHEED : Is there any proposal to permit the export of groundnut oil?

THE HON. SRI R. VENKATARAMAN : It does not follow from this question.

MR. SPEAKER : How does it arise from this?